ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 15

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

10–12–1949 விரோதி௵ கார்த்திகைமீ

# எம்பெருமானாரும் ஆண்டாளும்.

ஸ்ரீராமாநுஜன் பதின்மூன்றாவது பகுதியில் வெளியிட்ட திருவேங்கட முடையானனுபவமென்னும் மகுடம் புனைந்த வியாஸத்தில், ஆண்டாளருளிச் செய்த நாச்சியார் திருமொழியிலே * விண்ணீல மேலாப்பு என்கிற எட்டாவது பதிகத்தை விவரித்து வருகையில் "மஹா விவேகமுடையளான ஆண்டாள் அறிவு நடையாடாத மேகத்தை நோக்கி வார்த்தை சொல்லுகிறாளென்பது பொருந்தாததலால் பரமபக்தர்களான மஹாசார்யர்களையே மேகமாக மறைத்துச் சொல்லுகிறாளென்று ஸ்வாபதேசார்த்தங் காணவேணும்" என்று கூறி, மேகத்திற்கும் மஹான்களுக்குமுள்ள ஒற்றுமையைப் பத்துவகைகளாலே நிரூபித்துவிட்டு, முடிவில் "ஒவ்வொரு பாட்டிலுமுள்ள மேக விசேஷணங்களை உற்று நோக்குமிடத்து ஆசார்ய சிகாமணியான எம்பெருமானாரே தூது விடப்படுகிறாரென்று அறிய வெளிதாம்; அதைப்பற்றின விவரணம் அடுத்த இதழில் வெளிவரும்" என்றெழுதி யிருந்தோம். அந்த விவரணம் இப்போது ஆகின்றது.

* விண்ணீல மேலாப்புப் பதிகத்தில் ஆண்டாள் தனக்கு அண்ணரான எம்பெருமானாரையே திருவேங்கட முடையான் பக்கலில் தூது விடுகின்றாளென்பதை ஒவ்வொரு பாட்டிலும் மேகத்திற்கு இடப்பட்டிருக்கிற விசேஷணம் நன்கு மூதலிக்கின்றது. எங்ஙனே யென்னில்;

1. முதற்பாட்டில் மேகத்திற்கு விசேஷணம் * மேலாப்பு விரித்தாற்போல் * என்றுள்ளது. மேலாப்பாவது விதானம்; மேற்கட்டி. இதினுடைய ஸாம்யம் மேகத்திற் சொல்லி யிருப்பதானது ஸ்வாமி யெம்பெருமானாருடைய அவதார ரஹஸ்யத்தைத் தெரிவிப்பதாகும். எங்ஙனே யென்னில்; ஸ்வாமி ஆதிசேஷனுடைய அபராவதாரபூதரென்பது ப்ரஸித்தம். விதானமாயிருக்குந் தன்மை ஆதிசேஷனுக்கு ப்ரஸித்தம். கண்ணபிரான் வடமதுரையில் திருவவதரித்தவுடனே திருவாய்ப்பாடியிற் சென்று சேர்வதற்காக வஸுதேவ

ரால் வஹிக்கப்பட்டு மழையிலே எழுந்தருளுங்கால் மழைத்துளி மேலே விழாதபடி திருவனந்தாழ்வான் விதானமாக இருந்த வரலாற்றை நினைப்பது. "தொடுத்து மேல்விதான மாய பௌவநீராவணை" என்று (திருச்சந்த விருத்தத்தில்) திருமழிசைப் பிரானருளிச் செய்துள்ள பாசுரமும் நினைக்கத் தக்கது. ஸுதர்சந சதகத்தில் (5) *ஸூரம் யாஜ்ஞவல்க்யாச்யாமம் தாமப்ரஸ்ருத்யா * என்னும் ச்லோகத்தில் "ஹ்ராதிநாநம் விதாநஸ்ரியம் அகுஹா நிஷ—வ்யாதந்வாநம் விதாநச்ரியம்....சக்ரபாநம்" என்று திருவாழியாழ்வானுடைய ஜ்வாலையையும் விதானமாகச் சொல்லி யிருப்பதனால் இங்கு மேலாப்பென்கிற சொல்லால் திருவாழி யாழ்வானை நினைத்து உபலக்ஷணவகையினால் பஞ்சாயுதாழ்வார்களையும் கொண்டு, இராமாநுச நூற்றந்தாதியில் * அடையார் கமலத்தலர்மகள் கேள்வன் * என்கிற பாசுரத்தின்படிக்கும் * வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே: * என்ற யதிராஜஸப்ததி ச்லோகப்படிக்கும் எம்பெருமானார் பஞ்சாயுதாழ்வார்களின் திருவவதாரம் என்று வழங்குவதொரு ப்ரஸித்தியும் இங்கு ஸூசிதமாகிறதென்று கொள்ளலாம்.

2. இரண்டாம்பாட்டில் * மாமுத்த நிதி சொரியும் மாமுகில்காள் * என்றுள்ளது. நிதிகளைச் சொரிகின்ற மேகங்களே! என்று விளித்தது ஸ்வாமிவிஷயத்தில் மிகப் பொருத்தம். நவநிதிகளென்று ப்ரஸித்தமாதலால் நிதிகளின் எண்ணிக்கை ஒன்பதாகும். ஸ்வாமியருளிச் செய்த திவ்ய க்ரந்தங்களே இங்கு மாமுத்தநிதியாகச் சொல்லப் படுகின்றன. அந்த திவ்ய க்ரந்தங்கள் எண்ணிக்கையில் ஒன்பதாகவே அமைந்துள்ளன; 1. ஸ்ரீபாஷ்யம். 2. வேதாந்ததீபம். 3. வேதாந்தஸாரம். 4. கீதாபாஷ்யம். 5. வேதார்த்த ஸங்க்ரஹம். 6. சரணாகதி கத்யம். 7. ஸ்ரீரங்ககத்யம். 8. ஸ்ரீ வைகுண்டகத்யம். 9. நித்யம். ஆக ஒன்பது. ஆகவே மாமுத்தநிதி சொரியும் மாமுகில் எம்பெருமானாரே யென்க.

3. மூன்றும் பாட்டில் * அளியத்த மேகங்காள்! * என்றுள்ளது. கருணை மிகுந்த மேகங்களே யென்றபடி. ஸ்வாமிக்கு முற்பட்டிருந்த பூர்வாசார்யர்கள் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்களென்றும், ஸ்வாமியொருவரே க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்ய ரென்றும் சொல்லப்படுவர். இது ஸ்வாமிக்கு அஸாதாரணமாக உலகம் நிறைந்த புகழாகும். மணவாளமாமுனிகளும் உபதேசரத்தினமாலையில் * ஓராண்வழியா யுபதேசித்தார் முன்னோர், ஏரார்எதிராசரின்னருளால்—பாருலகில், ஆசையுடையோர்க் கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று, பேசிவரம்பறுத்தார் பின் * என்ற பாசுரத்தினால் இப்பெரும் புகழைப் பரவவிட்டருளினார். ஆக, அளியத்த மேகங்காள்! என்றது—பரமக்ருபையையே நிரூபகமாகக் கொண்ட எம்பெருமானாரே என்றபடியாயிற்று.

4. நான்காவது பாசுரத்தில் * மின்னாகத் தெழுகின்ற மேகங்காள்! * என்றுள்ளது. ஆகத்து மின் எழுகின்ற மேகங்காள்—உடலிலே மின்னல் தோன்றப்பெற்ற மேகங்களே! என்றபடி. மின்னலானது மழைபெய்ய ஸித்தமாயிருக்கின்ற மேகத்திலே தோன்றுமேயல்லது சரத்கால மேகத்தில் தோன்றாது. இத்தால் மழைபெய்ய ஸித்தமாயிருக்கின்ற மேகமே! என்றதாயிற்று. ஸ்ரீஸூக்தி யம்ருத வர்ஷங்களை எப்போதும் சிஷ்யவர்க்கங்களுக்கு அளித்துக் கொண்டிருக்கும் ஸ்வாமியே! என்றவாறு. அன்றிக்கே, ஸ்வாமியின் திருமார்பிலே திகழ்கின்ற யஜ்ஞஸூத்ரமானது "ஸௌதாமநீஸவர்ண ஸௌவர்ண யஜ்ஞஸூத்ரம்" என்கிறபடியே வித்யுத்ஸந்நிபமாய் விளங்குகின்றபடியால் அந்த வழகை யநுபவித்துச் சொன்னதாகவுங் கொள்ளலாம். இதர மதங்களிலே ஸந்யாஸிகளாக வுள்ளவர்கள் சிகாயஜ்ஞோபவீதங்களை யறுத்தெறிந்து கிடப்பர்; ஸ்வாமி

அப்படியன்றிக்கே "உபவீதிந ஊர்த்வபுண்ட்ரவந்தம்" "தண்டத்ரயோஜ்ஜ்வலகரம் விமலோபவீதம்" "ஜயதி யதிபதேர் வக்ஷஸி ப்ரஹ்மஸூத்ரம்" "முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல் தன்னழகும்" என்று ஈடுபட்டுப் பேசும்படி யஜ்ஞஸூத்ர ஸநாதராய் ஸேவைஸாதிக்குமழகு அவசியம் அநுபவிக்கத் தக்கதாதலால் இங்கு அதனைச் சொல்லிற்றாகக் கொள்வது உசிதம். அன்றிக்கே, திருவரையில் காஷாயம் விளங்குமழகை நோக்கி "மின் ஆகத் தெழுகின்ற" என்றதாகவுங் கொள்ளலாம். "காஷாயேண க்ருஹீத பீதவஸநா" என்ற யதிராஜஸப்ததி ஸூக்தியை இங்கே ஸ்மரிப்பது. ஆக மூன்று வகைகள் விவரிக்கப்பட்டனவிங்கு. இவற்றை விகல்பமாகக் கொள்ளாமல் ஸமுச்சயமாகவே கொள்ளலாம்.

5. ஐந்தாவது பாட்டில் "வான் கொண்டு கிளர்ந்தெழுந்த மாமுகில்காள்!" என்றுள்ளது. ஆகாசத்தைக் கபளீகரித்துக்கொண்டு கிளர்ந்தெழுந்த மேகங்களே! என்றபடி. இங்கு ஆகாசமென்று பரமாகாசத்தைச் சொன்னபடியாகும். அதாவது பரமபதம். எம்பெருமானாருடைய திருவடி ஸம்பந்தமில்லாதவர்களுக்குப் பரமபதப்ராப்தியில்லையென்று ஸம்ப்ரதாயம். பங்குனி யுத்தரத் திருநாளில் ஸ்ரீரங்கநாச்சியாரும் ஸ்ரீரங்கநாதனுமான சேர்த்தியிலே கத்யமநுஸந்தித்து "அஸ்து தே, தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே" இத்யாதிகளான அநுக்ரஹவாக்யங்களினால் தமக்கும் தம்மடியார்க்குமாகப் பரமபதத்தைப் பெற்றுக்கொண்டு கிளர்ந்தெழுந்த மேகம் எம்பெருமானாரே யாவர். அன்றிக்கே, "அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜ த்வந்த்வமாச்ரித்ய, பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபு:, ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாதமநுத கதம் வர்ண்யதே கூரநாத:" என்கிற கூரத்தாழ்வானது தனியனில் அநுஸந்திக்கப்பட்டுவருகிற ஐதிஹ்யத்தின்படியே ஆழ்வானுடைய ஸம்பந்தத்தினால் தமக்கும் மோக்ஷமுள்ளதாக அறிந்து மகிழ்வெய்தின எம்பெருமானாரே! என்றதாகவும் கொள்ளலாம். இப்பொருளில், வான் கொண்டு—பரமபத ப்ராப்தியுள்ளதாக அறிந்து கொண்டு என்க.

6. ஆறும்பாட்டில் * சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்முகில்காள்! * என்றுள்ளது. சலமாவது ஜலம்; தீர்த்தத்தை யெடுத்துக்கொண்டு கிளர்ந்தெழுந்த மேகமே! என்றதாயிற்று. மேகமானது ஜலத்தை முகந்துகொண்டு கிளர்ந்தெழுவது போல எம்பெருமானாரும் விந்த்யாடவியில் நின்றும் புண்யகோடி விமானச்சாயையிலே தம்மை ஓரிரவிலே கொண்டு சேர்த்த பெருந்தேவி மணவாளனை பேரருளாளனுக்குச் சாலக்கிணற்றில் நின்றும் தீர்த்தங்கொண்டு கிளர்ந்தெழுந்தமை வைபவ நூல்களில் விசதம். "உத்தம் யேந தயாஸுதாப்புநிதிநா பீத்வா விசுத்தம் பய: காலே ந: கரிசைல க்ருஷ்ணஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி" என்ற யதிராஜஸப்ததி ஸூக்தி இங்கே அநுஸந்தேயம். சிலேடையினால் மற்றொரு பொருளும் இங்கே விவக்ஷிதம். அதாவது வடமொழியில் छल என்னும் சொல் தமிழில் சலமெனத் திரியும். சலமாவது கபடம்; அதைத் தெரிந்துகொண்டு கிளர்ந்தெழுந்த மேகம் எம்பெருமானார். யாதவ ப்ரகாசரிடத்தில் ஸ்வாமி வேதாந்த ச்ரவணம் பண்ணுகிற்கையில் வேதாந்தப் பொருள் விஷயமான வாதவிவாதங்கள் அடிக்கடி நேருவதுண்டு; அப்போது அஸூயை மிகுந்து யாதவர் ஸ்வாமியை மாய்க்கவெண்ணிக் கபடபுத்தியுடன் கங்கா யாத்திரை புறப்பட்டார்; அந்த யாத்திரையில் ஸ்வாமியும் எம்பாரும் அந்வயித்திருந்தனர். விந்த்யாடவீப்ராந்தம் செல்லுகையில் இந்தச் சூழ்ச்சியை எம்பாரால் தெரிந்துகொண்டு ஸ்வாமி கிளர்ந்தெழுந்து திரும்பின வரலாறு ப்ரஸித்தம். அதுவும் இங்கு

சொல்லப்படுவதாகக் கொள்க. சலம்—(யாதவப்ரகாசருடைய) சூழ்ச்சியை; கோண்டு—தெரிந்துகொண்டு, கிளர்ந்தெழுந்த மேகமே! என்றதாயிற்று.

7. ஏழாம்பாட்டில் * சங்கமாகடல் கடைந்தான் தண்முகில்காள்! * என்றுள்ளது. சங்குகள் மிகுந்த பெரியகடலைக் கடைந்த எம்பெருமானுடைய ஸம்பந்தம்பெற்ற மேகமே! என்று பொருள். தமிழ்ச்சங்கத்திலே பெருமைபெற்றதாம்படி வேதக்கடலைக் கடைந்து அமுதமளித்தவரான நம்மாழ்வாருடைய திருவடிஸம்பந்தம் பெற்ற மேகம் ஸ்வாமியெம்பெருமானர். பிள்ளைப் பெருமாளையங்கார் பணித்த பாசுரமொன்று—*மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தால் கடைந்து, துறைப்பால் படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிர்தம், கறைப்பாம்பணைப் பள்ளியானன்பரீட்டங் களித்தருந்த, நிறைப்பான் கழலன்றிச் சன்ம விடாய்க்கு நிழலில்லையே * என்பது நினைக்கத்தக்கது. பகவான் அமரர்கட்கு அமுதங் கொடுப்பதற்காகக் கடலைக் கடைந்தான்; நம்மாழ்வார் * தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன் * என்று தாமே பணித்தபடியே நிலத்தேவர்களான தொண்டர்கட்கு அமுதமளிக்கவேண்டி வேதக்கடலைக் கடைந்தவராயிற்று. அவருடைய ஸம்பந்தமே எம்பெருமானாராகிற மேகத்திற்கு நிரூபகம். "புகழ்மலிந்த பாமன்னுமாறனடி பணிந்துய்ந்தவன்—இராமானுசன்" என்றார் திருவரங்கத்தமுதனார். "ஸ்ரீமாதவாங்க்ரி ஜலஜத்வய நித்ய ஸேவா ப்ரேமாவிலாசய பராங்குசபாதபக்தம்—ராமாநுஜம் யதிபதிம்" என்றார் மணவாளமாமுனிகளும். ஆக, சங்கமாகடல் கடைந்தவரான நம்மாழ்வாருடைய ஸம்பந்தம் பெற்ற ஸ்வாமிந்! என்றதாயிற்று. "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ர வாக்யங்களொருங்கவிடுவர்" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம்.

8. எட்டாம் பாட்டில் * கார்காலத்தெழுகின்ற கார்முகில்காள்! * என்றுள்ளது. மழைகாலத்தில் தோன்றுகின்ற காளமேகமே! என்றபடி. ஸ்ரீராமாநுஜமேகமும் இப்படிப்பட்டதே. * அவிவேக கநாந்ததிங்முகே பஹுதா ஸந்தததுக்கவர்ஷிணி, பகவந் பவதுர்திநே * என்று ஆளவந்தாரருளிச் செய்தபடியே யாவரும் நிச்சலும் அநுபவிக்குமதான ஸாம்ஸாரிகதுக்கவர்ஷா காலத்தில் அதைப் போக்குவதற்காக எழுந்த மேகம் ஸ்வாமி. அன்றிக்கே, * தேவராஜதயாஸிந்தோ! தேவதேவ ஜகத்பதே, த்வதீக்ஷணஸுதாஸிந்து வீசி விக்ஷேபசீகரை:, காருண்யமாருதாநீதைச் சீதலைரபிஷிஞ்சமாம் * என்று திருக்கச்சிநம்பிகளும் * ஹஸ்தீச! த்ருஷ்ட்யம்ருத வ்ருஷ்டிபிராபஜேதா: * என்று கூரத்தாழ்வானும் பணித்தபடியே ப்ரஸித்தமான பகவத்கடாக்ஷாம்ருத வர்ஷா காலத்திலே அதனைப் பெருகச் செய்வதற்காக எழுந்தது ஸ்வாமியாகிற மேகம்—என்னவுமாம்.

9. ஒன்பதாம்பாட்டில் * மதயானைபோலெழுந்த மாமுகில்காள்! * என்றுள்ளது. "கரியமாமுகிற்படலங்கள் கிடந்தவை முழங்கிடக் களிறென்று" (பெரிய திருமொழி 1—2—10) என்ற திருமங்கையாழ்வாரருளிச் செயலின் படியே யானைக்கும் மேகத்திற்கும் வாசி தெரிவரிதாதலால் மதயானை போலெழுந்த மேகமென்னத்தகும். ஸ்வாமியும் நூற்றந்தாதியில் "எங்களிராமாநுச முனிவேழம்" என்று யானையாகச் சொல்லப்பட்டுள்ளார். இங்கு விசேஷித்து அறியவேண்டியது மொன்றுண்டு. ஸ்வாமி ஒருகால் திருமலைக் கெழுந்தருளி பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கி அங்கு த்வயார்த்த முபந்யஸித்தருளத் தொடங்கி அத்தோடு திருமந்த்ரார்த்தத்தையும் சரமச்லோகார்த்தத்தையும் சேர்த்து உபந்யஸித்துத் தலைக்கட்டினவாறே அந்த மஹாகோஷ்டியில் அனந்தாழ்வான் எழுந்து

" பெருகுமதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று
இருக ணிளமூங்கில் வாங்கி—அருகிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங்கடங்கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை." (இரண்டாந்திருவந்தாதி—75)

என்ற பூதத்தாழ்வார் பாசுரத்தை ஸ்வாமி விஷயமாக நிர்வஹித்துப் பேசியருளினரென்பதோர் இதிஹாஸமுண்டு. [நம்முடைய பன்னிருதிங்களநுபவ மென்னும் நூலில் 74, 75 பக்கங்களில் இது விரிவாகக் காணத்தக்கது.] அதனாலும் *மதயானை போலெழுந்த மாமுகில் எம்பெருமானரே யென்பது அறிய வெளிதாகும்.

ஆக இவ்வளவு பொருத்தங்களாலும் ஆண்டாள் தூதுவிட்ட மேகம் எம்பெருமானரே யென்று திண்ணமாக எண்ணத்தகும். ... .... .... *

ஸ்ரீ:

# கைங்கர்ய குதூஹலப்ரதிஷ்டா

உலகமறிந்த ஒருகாரணார்த்தமாக இரண்டரைவருஷகாலம் திவ்யதேசாநுபவத்தை விட்டு விலகியிருந்த அடியேன் ஸமீபகாலத்தில் சிலமாதங்களாக திவ்யதேசானுபவத்தைப் பரிக்ரஹித்திருக்கிறேனென்பது பலருமறிந்தது. இதை அடியேன் நாடு நகரமும் நன்கறியப் பத்திரிகை மூலமாக வெளியிட்டுமிருக்கிறேன். அதாவது கைங்கர்ய குதூஹலமென்று மகுடம் புனைந்த பத்திரிகை யொன்று பிரசுரம் செய்திருக்கிறேன். சிலமாதங்களுக்கு முன்பு அடியேன் ஸ்ரீ பதரிகாச்ரமயாத்திரை விடைகொள்ள நேர்ந்தது. வையங்கண்ட வைகாசியுத்ஸவமென்று கொண்டாடப்படுகிற தேவப்பெருமாள் வைசாகோத்ஸவத்திற்கு உலகமெல்லாம் திரண்டுருண்டு காஞ்சீபுரம் வந்து ஸேவித்துக் களியாநிற்க அடியேன் அதே மஹோத்ஸவ ஸமயத்தில்—அதிலும் கருடோத்ஸவ தினத்தில் காஞ்சீபுரியை விட்டு வெளியேறப் புறப்பட்டேன்.

" வரில் போகடேன் கெடில்தேடேன் " என்று ஆசார்யர்கள் அடிக்கடியருளிச்செய்வதொரு ஸ்ரீ ஸூக்தியின்படியேயல்லாமல் அறியாக்காலந் தொடங்கி "ஆரெனக் கின்று நிகர் சொல்லில்" என்று மார்புதட்டிப் பேசும்படியாக, "அந்தோவடியேனுனபாதம் அகலகில்லேனிறையுமே" என்று ஒரு கணப்பொழுதும் விடாமல் தேவப்பெருமாளுகந்த மஹா கைங்கர்யத்திலே ஊன்றியிருந்த நாம் இப்படி நன்னாளிலே பெருமாள் முகத்திலும் விழிக்கப் பெறாதே ஊரைவிட்டும் வெளியேறும்படியாவதேயென்று கண்ணீர் பெருக்கிக்கொண்டே கிளம்பினேன். எந்த நாடு சென்றாலும் தேவப்பெருமாள் நினைவு க்ஷணகாலமும் மாறமாட்டாதாதலால் இரவும் பகலும் இதுவே சிந்தையாகவே யாத்திரைசெய்து கொண்டிருந்தேன்.

கடைசியாக வதரியாச்சிரமத்துள்ளான் திருவடி வாரத்திலே சென்று சேர்ந்து அப்பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வாரருளிய பாசுரங்களை வாயார கோஷித்துக் கொண்டே அப்பெருமான் ஸன்னிதியை வலம் வந்தேன். பெரிய திருமொழியில் (1-4.) * ஏனமுனாகி * என்கிற பதிகமன்றோ ஸ்ரீ பதரீ நாதனை மங்களாசாஸனம் செய்தது. அதில் நான்காவது பாசுரம்—" துணிவினியுனக்குச் சொல்லுவன்மனமே ! தொழுதெழு தொண்

2.

டர்கள் தமக்குப் பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும் பேரருளாள னெம்பெருமான்" என்றுள்ளதென்பது ப்ரஸித்தம். பேரருளாள னென்று உலகமறிந்த தேவப்பெருமாளாகவே ஸ்ரீ பதரீநாதனை அநுஸந்தித்து *பிணியொழித் தருளுமெம்பெருமா னென்றும் பேசியிருப்பதால் உடற்பிணியிற் காட்டிலும் வலிதாக நமக்கு நேர்ந்திருக்கின்ற மனப்பிணியை இப்பெருமான் போக்கி யருளமாட்டாரோ வென்று இதுவே சிந்தையாக அப்பெருமானை வலம் செய்தேன். உடனே ஸன்னிதியினுள்ளே சென்று பெருமானை ஸேவிக்கையில் பரம விலக்ஷணமான வொரு அநுக்ரஹம் ப்ராப்தமாயிற்று. அப்போதே பிணியொழிந்த தென்று பெருமகிழ்ச்சி யடைந்தேன். அந்த ஸன்னிதிவாசலி லுட்கார்ந்தே கைங்கர்யகுதூஹலம் எழுதி அச்சிடவனுப்பினேன். ஊர்வந்து சேர்ந்தபின் கைங்கர்யத்திலும் அந்வயித்தேன். அச்சிட்டு வெளிவந்ததைப் பலர்பார்த்து "ஒருவருக்கும் வாய்திறக்க இடமில்லாதபடி மிகவும் யுக்தமாகவே யெழுதப்பட்டுள்ளது" என்று உகந்தார்கள். சிலர் வேறுகவும் சொல்லிக் கொண்டார்களாம்.

உகந்தாருடைய உகப்பும் வெறுத்தாருடைய வெறுப்பும் ஆகிய இரண்டும் அடியேனுக்கு அகிஞ்சித்கரமென்பதை அப்பத்திரிகையிலேயே காட்டியுள்ளேன். ஆகவே வெறுப்பாருடைய வார்த்தைகளைப் பொருள்படுத்தி அடியேன் யாதொன்றும் எழுத வேண்டிய அவசியமில்லை. ஆனால், சில ஆப்தர்களுங்கூட "முன்பெழுதின தீண்டாமை தொலையாமை, பகவச் சாஸ்த்ரதத்வம் முதலான நூல்களுக்கு முரணாக இந்த கைங்கர்ய குதூஹலம் தோன்றி யிருக்கிறதே, பரஸ்பர விருத்தமாக இப்படியும் க்ரந்த மெழுதுகிற விதமொன்று தேறிவிட்டால், மற்றும் பல வழிகளில் எழுதப்பட்டுள்ள—எழுதப்பட்டு வருகின்ற க்ரந்தங்களும் இப்படித்தானிருக்குமோ வென்று சிலர் சங்கிக்க நேர்ந்துவிடுமே" என்று ப்ரஸ்தாவம் செய்தபடியால், ப்ரக்ருத விஷயம் யாவர்க்கும் தெளிவாகத் தெரியும்படி விளக்க வேணுமென்கிற எண்ணந் தோன்றி இந்த வியாஸமெழுதி வெளியிடுகிறேன்.

இதில் அடியேன் முக்கியமாகத் தெரிவிக்க விரும்பும் விஷயங்கள் இரண்டே.

1. பூர்வோத்தர க்ரந்த விரோதம் என்பது பற்றியும்;

2. தற்கால நிலைமையில் ஆலய வழிபாடு பாபந்தானென்று பிரசுரம் செய்து கொண்டே இக்காரியத்தைச் செய்வது நலமாகுமோ என்பது பற்றியும்.

ஸ்ரீ வைஷ்ணவகுல திலகர்களான ஆழ்வாராசாரியர்களின் ஸ்ரீ ஸூக்திகளை சிரஸா வஹிப்பவர்களை நோக்கியே அடியேன் இது எழுதுவதனால் அந்த திவ்ய ஸ்ரீ ஸூக்திகளை ப்ரஸங்கித்தே பெரும்பாலுமிதை யெழுதுகிறேன். ஆலயங்களுக்கு நேர்ந்திருக்கிற ஸம்பவம் சாஸ்த்ர ஸம்மதந்தான் என்றுவது, இப்போது ஸன்னிதிகளிற் சென்று கைங்கரியம செய்வது சாஸ்த்ரஸம்மதந்தான் என்றுவது இங்கு அடியேன் எழுதப்போகிறதில்லை; அதை நெஞ்சால் நினைக்கவும் ப்ரஸக்தியில்லை என்பது முந்துறமுன்னம் விஜ்ஞாபிக்கப்படுகிறது. இது கைங்கரிய குதூஹலத்திலும் விசதம்.

பூர்வோத்தரவிரோதம் என்பதுபற்றி முதலில் கேண்மின்:-

ஸ்ரீவசன பூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் (397.)

"இவ்வார்த்த விஷயமாக ஆழ்வார்கள் பாசுரங்களில் பரஸ்பர விருத்தம் போல் தோற்றும்; அவற்றில் சோல்லுகிற பரிஹாரமும் மற்றுமுண்டான வக்தவ்யங்களும் விஸ்தரபயத்தாலே சோல்லுகிறிலோம்."

என்கிற சூர்ணையிருப்பது ப்ரஸித்தம். எம்பெருமானுடைய நிர்ஹேதுக விஷயீகார மென்னும் விஷயத்தில் முன்பின் விருத்தமாக ஆழ்வார் பாசுரங்களில் சொல்லியிருப்பதாக இங்கு வ்யக்தமாகக் காட்டப்படுகிறது. அந்த விரோதத்திற்குப் பரிஹார வழிகள் உண்டென்று உடனே கூறியிருந்தாலும், மேலெழுந்தவாரியாகப் பார்க்குமளவில் பரஸ்பர விரோத முண்டென்று பேராசிரியர் காட்டியிருப்பதால் அப்படிப்பட்ட பூர்வோத்தர விரோதம் அடியேனுடைய உக்தியிலும் தோன்றுமானால் "நம்முடைய இளைய புன் மொழிகளும் ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளோடு ஒருவாறு ஸாம்யம் பெற்றுவிட்டன" என்று அடியேன் செருக்குக் கொள்ளவே ஹேதுவாகுமத்தனை.

இதன்மேல் சொல்லக்கூடிய வார்த்தையொன்றுண்டு; பிள்ளைலோகாசாரியர் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில் பரஸ்பர விருத்தம்போல் காணப்படுவதுண்டு என்று கூறியிருந்தாலும், பரிஹாரமுள்ளதாக உடனே கூறியிருக்கிறுரே: மணவாளமாமுனிகள்போல்வாரான வியாக்கியானப் பேராசிரியர்கள் விரோதபரிஹார வழிகளைக் காட்டியுமிருக்கிறுர்களே. அப்படி இங்கும் பரிஹாரம் காட்டினுலன்றே பாங்காகும்—என்பதாக.

இஃது உண்மையே. இங்கு நாம் எழுதுவதாகக் கொண்ட இரண்டு விஷயங்களுள் இரண்டாவது விஷயத்தை யெழுதிவிட்டால் யாவர்க்கும் தெளிவு பிறந்துவிடும். ஆகவே அதையெழுதுகிறேம்.

தற்கால நிலைமையில் ஆலய வழிபாடு செய்வது பாபந்தானென்று தெரிந்து கொண்டும் அதை வெளியிட்டுக்கொண்டும் ஆலயவழிபாடு செய்யலாமா? அபுத்திபூர்வகமான பாபத்திற் காட்டிலும் புத்திபூர்வகமான பாபத்திற்குக் கொடுமை அதிகமாயிற்றே; ஆகவே இக்காரியம் யுக்தமாகாதே என்பார்க்கு பதில் சொல்லுவதுதான் இங்கு முக்கியமாக எடுத்துக் கொள்ளப்படுகிறது.

இது பாபக்ருத்யம், இது புண்யக்ருத்யம் என்கிற விவேகம் எம்பெருமானைத் தொழுவது தவிர மற்ற விஷயங்களிலே யல்லது எம்பெருமானைத் தொழும் விஷயத்தில் கிடையாது. வஸ்துஸ்திதியில் பாபக்ருத்யமாயிருந்தாலும் அது எம்பெருமான் திறத்தில் ஆஸக்தியடியாக வாகில் அது புண்யகாரியம் போலவே போற்றத்தக்கதாகின்றது. இதைச் சில த்ருஷ்டாந்தங்களினுல் அவரவர்கள் திடப்படுத்திக் கொள்ளலாம்.

ஆழ்வார்கள் ப்ரபந்நஜநகூடஸ்தர்கள். ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களைத் தெளியவுணர்ந்தவர்கள். குல மரியாதை தவருமல் வழிபாடு செய்பவர்கள். அப்படியே பிரதிஜ்ஞையும் செய்திருப்பவர்கள். இப்படிப்பட்ட இப்பெரியார்கள் செய்திருக்கின்ற சில காரியங்கள் பேர்க்கவும் போரதபடி வடுபட்டுக் கிடக்கின்றன. கேண்மின்; "அனங்கதேவா! உன்னையு மும்பியையும் தொழுதேன்" "மன்மதனே யுன்னை வணங்குகின்றேன்" "கருப்புவில் மலர்க்கணைக் காமவேளைக் கழலிணை பணிந்து" என்று காமதேவாச்ரயணமாகிற புறந்தொழுகையைச் செய்திருப்பது அபலபிக்க முடியாது. 'மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்று, 'எம்பெருமானை மறந்தாலும் மறக்கலாம், தேவதாந்தரபஜனம் கூடாது' என்பாருடைய கோஷ்டியில் இப்படிப்பட்ட பாசுரங்கள் தலைகாட்டலாகுமோ! இதற்கு மேற்பட நோன்பு நோற்பதும் செய்யக் காண்கிறேம். அதுவும் ப்ரபந்ந ஸந்தானத்திற்குச் சிறிதும் தகாத காரியமன்றே. இதற்கும் மேலாக "மடலூர்வேன்" என்றும் கோஷிக்கிறுர்கள். அது எப்படிப்பட்ட காரியமென்பதை இன்றிருந்து நாம் ஆராய

வேண்டாதபடி அவர்களது திருவாக்கிலேயே வந்துள்ளதைக் காண்மின். "பெருந் தெருவே ஊராரிகழினும் ஊராதொழியேன் நான்" என்கிருர் திருமங்கையாழ்வார். இதனல் ஊராரெல்லாரும் இகழத்தக்கதேயிது என்று விளங்கக் காட்டியாயிற்று. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் * மாசறு சோதி யென்னும் பதிகத்தில் ஒன்பதாம் பாட்டில் ப்ரஸ்தாவிக்கப்போகிற மடலூர்தலைப்பற்றிப் பதிகம் தொடங்கும்போதே "அறிவிழந்து எனை நாளையம் ஏசறுமூரவர்கவ்வை தோழீயென் செய்யுமே" என்கிருர். இதனல், மடலூர்வதென்பது அறிவுடையார் செய்யுங்காரியமன்று; அறிவிழந்தார் செய்யுங் காரியமேயென்பதும், ஊரவர்கள் யாவரும் பழிக்கத்தக்கதே யென்பதும் சிலாசாசனமாகக் காட்டப்பட்டிருக்கின்றது. அங்கு அடுத்தடுத்துப் பல பாசுரங்களிலும் "என்செய்யுமூரவர் கவ்வையே" என்கிருர். இதனல் இரண்டு விஷயம் அறியக்கிடக்கின்றது; தாம் செய்யும் காரியம் ஊரார் பழிக்கத்தக்கது என்பதொன்றும், எம்பெருமான்விஷயத்திலே ப்ராவண்யமுடையவர்கள் ஊாருடைய பழிமொழிகளைப் பொருள்படுத்தமாட்டார்கள்; பொருள் படுத்தவேண்டா—என்பதொன்றுமாக இரண்டு விஷயங்களைக் கல்வெட்டும் செப்பேடுமாக ஆக்கியிருக்கிருர் நம்மாழ்வார்.

எம்பெருமான்விஷயந்தவிர மற்ற விஷயங்களில் நாம் அக்ருத்யம் செய்தோ செய்ய நினைத்தோ அதற்காகப் பழிப்பு ஏற்பட்டால் அதற்கு நாம் மிகவும் அஞ்சவேண்டியதே. அப்பழியைப் பரிஹரிக்கப் பார்த்திலோமாகில் அதோகதியே யாகும். அங்ஙனன்றிக்கே எம்பெருமான் விஷயத்தில் மெய்யான ப்ராவண்யத்தாலோ பொய்யான ப்ராவண்யத்தாலோ சில பல ஸாஹஸ ப்ரவ்ருத்திகளை நாம் செய்தோமாகில் அதற்காக எவ்வளவு பழிப்பு ஏற்பட்டாலும் அது "பழிக்கில் புகழ்" என்ற கணக்கிலே பெரும் புகழாகவே தலைக்கட்டும்.

மடலூர்வேனென்றதும் நோன்பு நோற்றதும் காமன்காலிலே விழுந்ததும் எம்பெருமானைப் பெறுதற்காகவாதலால் உபாதேயமாயிற்றேயொழிய, அவையே வேருரு பிரயோஜனத்திற்காகச் செய்தவையாகில் குடிகெட்டிருக்குமன்றே.

இவ்விஷயத்தை இன்னமும் நாம் விவரிக்க வேணுமோ? வேண்டா; இவ்வளவே போதும். ஆனல் இதற்குமேல் ப்ராமாணிகர்கள் கேட்கக்கூடிய கேள்வி யொன்றுண்டு; அதாவது—"இவ்விஷயங்களை யெல்லாம் நீ இப்போதாக அறிந்தாயல்லையே; முன்னமே அறிவாயன்றே; அப்போது 'இந்நிலைமையில் ஆலயவழிபாடு செய்யவே கூடாது, செய்வது பாதகம்' என்று வலிதாக எழுதினதேன்?" என்று கேட்கக்கூடும். இது பொருத்தமான கேள்வியே. இதற்கு விடை கூறவேண்டியது அவசியமே; கூறுகின்றேம் கேண்மின். நடந்த காரியமோ தர்ம விருத்தமாய் மிகவும் அதர்க்கணமாக நடந்தது. அது அவசியம் ஆக்ஷேபிக்கத் தகுந்ததாதலாலும் உண்மையான சாஸ்த்ரார்த்தங்களை வெளியிட்டே யாகவேண்டுமாதலாலும் "தைவம் நிஹத்ய குரு பௌருஷ மாத்மசக்த்யா" என்ற கட்டளையிலே நம்முடைய கடமையைச் செலுத்தினேம். ஒருவர் தப்பாமல் அனைவருமாகச் சேர்ந்து ஆலய வழிபாட்டில் விலகியிருந்து ஆந்தனையும் முயன்று தர்மப்ரதிஷ்டாபனம் செய்து பார்ப்போமென்று பார்த்தோம். "ப்ராஹ்மணா மஸங்காதாத்" என்றபடியே யாயிற்று. இவ்வாபத்திற்கு நம்முடைய வாழ்நாளில் பரிஹாரம் காண்பது அரிதென்று தோன்றினபடியாலும், லௌகிகத்தில் ப்ரதிஷ்டிதர்களான பெரியார்பலரும் அப்படியே அபிப்ராயப் பட்டபடியாலும் சிந்தைதன்னுள் ஒருநாளும் நீங்காதிருந்த கைங்கர்ய குதூஹலம் கார்யபர்யவஸாயியாயிற்று.

மடலூர்ந்தாகிலும் எம்பெருமானைப் பெற்றே தீரவேணுமென்றிருந்த ஆழ்வாருங் கூட * மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார் * என்கிற வொரு பதிகத்தில் அவ் வெம்பெருமானைக் கதவடைத்துத் தள்ளி "போகுநம்பீ !" என்பதும் "ஒருநான்று தடிபிணக்கே" என்பதுமாய் உபேக்ஷித் திருந்ததாகக் காண்கிறோமன்றோ. வழியல்லா வழியே மடலூரப் பார்த்ததற்கும், வந்துநின்ற பெருமானைக் கதவடைத்துத் தள்ளினதற்கும் என்ன சேர்த்தியுள்ளதென்று கேட்டால் இதற்கு விடை தருவாருண்டோ ?

'ஓகோ ! இவரும் ஒரு ஆழ்வாரோ ? ஆழ்வாருடைய நிலைமைகளை இவரும் அநு கரிக்கிறாரோ ? பௌண்ட்ரக வாஸுதேவனோ ?' என்றிப்படி ஏசநினைப்பார் பலரிருப்பர்; அவர்களைப்பற்றி நமக்கென்ன ? எம்பெருமானை யடிபணியும் விஷயத்தில் ஆழ்வாராகவே நம்மை நினைத்துக் கொள்வதும், ஆழ்வார்க்கு மேற்படவும் நம்மை நினைத்துக் கொள்வதும், அவர்களை அநுகரிக்கப் பார்ப்பதும் எதுவும் பொருந்தும். இதில் பிறருடைய ஏசுதல் பய னற்றது. "இனி நான் ஜாரக்ருத்யம் செய்வதில்லை, இனிநான் சோரக்ருத்யம் செய்வ தில்லை" என்று ப்ரதிஜ்ஞை பண்ணிவைத்து அதற்குமாறாக நடந்து கொள்வாரை ஏசுதல் பொருந்தும். எம்பெருமானைத் தொழுதற்கே இட்டுப்பிறந்த நாம் அதில்விலகி எத்தனை ப்ரதிஜ்ஞை செய்தாலும் அது வொரு காரணார்த்தமாகவே யாதலால் அந்த ப்ரதிஜ்ஞை மாறிற் றென்றால் அதற்கு உகப்பது உரியதேயன்றி வெறுப்பது தகாது.

"இந்நிலைமையில் பகவத் ஸன்னிதியில் சென்று கைங்கர்யம் செய்பவர்கள் அங்கு பகவத் ஸன்னிதான முண்டென்று நம்பித்தானே செய்கிறார்கள்; அந்த நம்பிக்கை யிருக் கும் பக்ஷத்தில் ப்ரஸாதஸ்வீகாரமும் பண்ணினால் என்ன குற்றம் ? என்ன பாபம் வந்திடும் ? அதை விலக்கினதாக வெளியிட்டுக் கொள்வது எதற்காக ?" என்று சிலர் கேட்பதுண்டு. அவர்கட்கும் விடையளிக்கிறோம். வயிறுவளர்க்கவே பிறந்த நம்முடைய வயிற்றில் நாடோறும் க்ஷணந்தோறும் கணக்குவழக்கில்லாதபடி புகுகின்ற அன்னமெல் லாம் பரமபவித்திரமான அன்னமென்று யாரும் சொல்லமுடியாது. பலவகைப்பட்ட அசுத்தான்னங்களும் தெரிந்தும் தெரியாமலும் நம்மால் உண்ணப்படுகின்றன வென்பதை ஒவ்வொருவருடைய உள்ளமும் அறியும். ப்ரக்ருத விஷயம் என்னவென்றால், தேவால யங்களில் அசுத்தி ஏற்பட்டபோது பலபல வைதிகர்களும் விலக நேர்ந்தது; அப்போது எதிர்வகுப்பிலுள்ள பெரியார்பலர் என்ன சொல்லத்தலைப்பட்டார்கள் தெரியுமோ? "கோவில் சோற்றையுண்டே ஜீவிக்கவேண்டிய இந்த வைதிகப் பிச்சுக்கள் எத்தனைநாள் விலகியிருக்க முடியும் ? ருசிகரமான ப்ரஸாத பணியாரங்களை நினைத்துக் கொண்டு நாலுநாளில் மறுபடி யும் வந்து புகவே போகிறார்கள்" என்று சொல்லியும் பத்திரிகைகளில் எழுதியும் போந் தார்கள். வைதிகர்கள் ஸன்னிதிக்குப் போவது ப்ரஸாத பணியாரங்களுக்காகவே யென்று பலர்க்கு மருள் இருப்பதனால் 'இனி ஆலயங்களில் ப்ரஸாத பணியார விநியோகங்களை அறவே நிறுத்திவிடவேணும், அல்லது வைதிகர்கள் அவற்றை ஸ்வீகரியாமலாவது இருந்துவிட வேணும்' என்று கட்டுப்பாடு செய்ய அடியேனுக்குத் தோன்றியது. ஆனால் இது நிறை வேறக்கூடியதன்று; நம்வரையிலாவது விலக்கி நிற்போம்-என்று நிச்சயித்து விலக்கி நிற்கிற படி. பெருமாள் ப்ரஸாதம் சுத்தமா அசுத்தமா என்கிற விசாரத்தில் அடியேனுடைய உள் ளம் சிறிதும் புகவில்லை. சிலருடைய எண்ணப்படி சுத்தமாகவே யிருக்கட்டும். பல ருடைய எண்ணப்படி அசுத்தமாகவே யிருக்கட்டும். அடியேன் ப்ரஸாதஸ்வீகாரத்தை விலக்கிக் கொண்ட காரணம் உள்ளபடி இங்கு உணர்த்தலாயிற்று.

சுருக்கமாக எழுத நினைத்த இந்த வியாஸம் மிக நீண்டுவிட்டது. முடித்துக்கொள்ளுகிறேன். "அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ நீர் இந்த ளூரீரே" என்ற திருமங்கை மன்னன் திருவாக்கின்படி அடியோமுக்காகவே வந்து ஸன்னிதி பண்ணியிருக்குமிடமான திவ்ய தேசங்களில் வழிபாட்டை நாம் விலக்கி நிற்பது யுக்தமாகாது. ஏதோ பரிஹாரம் கிடைக்குமென்கிற ப்ரதீக்ஷையினால் விலகி நிற்கலாம். அப்படி நிற்பவர்கள் இனி என்ன பரிஹாரம் கிடைக்கக்கூடுமென்பதை ஆர அமர ஆலோசிக்க வேண்டும். ஒரு பரிஹாரமும் கிடைக்காதென்று திண்ணமாக அறிந்திருந்தும் விலகிநிற்பதே கதியென்று துணியுமவர்கள் 'இனி நம்முடைய வாழ்நாளில் திவ்ய தேசாநுபவமென்பது ஒரு நாளுமே நமக்கு வேண்டாம்' என்று தீவிரமாக உறுதிகொண்டவர்களாயிருக்கவேண்டும். அப்படிப்பட்ட உறுதி கொள்ளும்படியான நெஞ்சுரமுடையாரைப் பற்றி அடியேன் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. அடியேனைப் போலவோ அடியேனைக் காட்டிலும் அதிகமாகவோ திவ்ய தேசாநுபவங்களில் பழுத்திருந்தவர்கள் அப்படிப் பட்ட வுறுதி கொள்வது உரியதன்று. கொண்டார்களெனின்; எம்பெருமான் தானே நிக்ரஹிக்க நினைத்து இவர்களை விலக்கி விட்டதனால் அந்த நிக்ரஹஸங்கல்பம் மாறுகிறவரையில் இவர்கள் அப்படித்தான் உறுதி கொண்டிருக்க வேண்டும் என்றே சொல்லுவேன்.

அவரவர்கள் செய்த பாவங்கள் வலிதாயிருந்தால் அந்தப் பாவங்களின் பலனை இங்கேயே அநுபவிக்க நேருமென்பது நூற்கொள்கையாதலால் வலியபாபத்தின் பலனாக நேர்ந்த பகவந்நிக்ரஹத்தை நெடுக அநுபவிக்கிறார்கள் என்றல்லது வேறொன்றும் நினைக்க நேராது. அடியேன் விலகியிருந்த காலத்தில் 'நாம் செய்திருந்த பாவங்களின் பலனான பகவந்நிக்ரஹத்தை யநுபவிக்கிறோம்' என்றே ஒவ்வொரு க்ஷணத்திலும் நினைத்திருந்தேன். "மதியிலேன் வல்வினையே மாளாதோ?" என்றும் அநுஸந்தித்து வந்தேன். பேரருளாளப்பெருமான் அடியேனுடைய பிரார்த்தனைக்கு இரங்கியோ தன்னுடைய நிர்ஹேதுக கிருபையினாலோ அந்த நிக்ரஹ ஸங்கல்பத்தை நீக்கி யநுக்ரஹித்து ஆட்படுத்திக் கொண்டபடியால் ஆட்செய்து களிக்கின்றேன். இந்தக்களிப்பு மற்றுள்ளார்க்கும் ப்ராப்தமாக வேணுமென்கிற பிரார்த்தனையோடே இந்த வியாஸத்தை முடித்துக் கொண்டேன்.

நான் செய்கிற பாபம் மற்றவர்களுக்கும் நேரவேண்டாமென்று முன்பு [கைங்கர்ய குதூஹலத்தில்] வெளியிட்டேன். நான் செய்கிற பாபம் எல்லார்க்கும் நேர வேணுமென்கிற பிரார்த்தனையை இப்போது வெளியிட்டேனானேன்.

— போலிக போலிக போலிக. —

இங்ஙனம்:
ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்ய தாஸன்.
1—12—49.

---

## ஓர் முக்கியமான குறிப்பு.

சென்ற ஸ்ரீராமாநுஜனில் பதினோராம்பக்கத்தில் ஆரம்பம் செய்த "மணவாளமாமுனிகளும் அழகிய மணவாளனும்" என்கிற வியாஸம் அபூர்ணமாக வெளிவந்திருக்கின்றது. 13 முதல் 16 ஆகிய நான்கு பக்கங்களும் அப்போதே அச்சாகியிருந்தும் கார்யகர்த்தாக்களின் அஜாக்கிரத்தையினால் அது சேர்க்கப்படாமல் நின்று போயிற்று. அது இப்போது சேர்க்கப்படுகிறது. சென்ற ஸ்ரீராமாநுஜனையு மெடுத்துச் சேர்த்துப் பூர்த்தியாக வாசித்துக் களிப்பது.

ஸபா மானேஜர்.

விரும்பாதே மகனை மீட்டுத்தருகையாகிற க்ஷுத்ர புருஷார்த்தத்தை விரும்பினபடியால் அவன் பக்கலிலும் வெறுப்பேயாயிருந்தது. இப்படி வெறுப்புக்கு இலக்கான இரண்டு முனிகளையும் விட்டு ஸமஸ்தகல்யாண குணக்கடலான ரம்யஜாமாத்ருமுனியை வணங்கி வாழ்கின்றேனென்றதாயிற்று.

இவ்வளவு அர்த்த விசேஷங்களைக் கொண்ட இந்த ச்லோகம் எம்பெருமான்தானே சொல்லியிருக்க வேண்டுமேயொழிய ஒரு மனுஷ்யனால் கவிசெய்திருக்க இயலாதன்றோ. எம்பெருமானது ஹ்ருதயந்தன்னிலே உறையும் விஷயங்களன்றோ இவை. இவற்றை ஏறிட்டுக் கொள்ளவும் முடியாதே பிறரொருவர்க்கு. ஆகவே இந்தத் தனியன் தெய்வவாக்கே என்பது திண்ணமாயிற்று.

---

# "மரணமானல் வைகுந்தம்"

திருவாய்மொழியில் (9—10—5) "சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம், மரணமானல் வைகுந்தங் கொடுக்கும்பிரான்" என்கிற பாசுரத்தில் மூலாதாரம் சிறிதுமில்லாத வோர் ஐதிஹ்யம் ஆங்காங்குள்ளவர்கள் சொல்லிவருகிறார்கள். அதாவது, "மரணமாக்கி வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்று ஆழ்வார் திருவாக்கில் பாடம் வெளிவந்திருந்ததாம், ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வார் அதைக்கண்டு "இப்படியிருந்தால் எம்பெருமான் திருவடிகளில் யாரும் பணியமாட்டார்கள்; வந்து சேர்ந்தவர்களை யெல்லாம் மரணமாக்கி வைகுந்தம் கொடுக்குமவனென்று தேறினால் யாரும் அணுகமாட்டார்களன்றோ; ஆகவே இப்பாடத்தை மாற்றியேயாகவேண்டும்" என்று துணிந்து "மரணமானல்" என்று திருத்திப் பாடம்வழங்கலாயினர் என்பதாக ஐதிஹ்யம் சொல்லக் கேட்கிறோம். இது ஸம்ப்ரதாய நெறியிற்படிந்த பெரியார்களுக்கு உடன்பாடன்று. மரணமாக்கி யென்று பாடமிருந்திருந்தால் அதை மாற்றவேண்டிய அவசியமில்லை. அப்படி மாற்றுவதானால் மற்றும்பல பாசுரங்களையும் மாற்றவேண்டிவரும். இத்திருவாய்மொழியிலேயே இரண்டாம்பத்தின் முடிவு பாசுரம் "அருளுடையவன்தாள் அணைவிக்கும் முடித்தே" என்பது. இதில் 'முடித்து' என்பதற்கு மரணமாக்கி யென்பதன்றோ பொருள். அதை மாற்றாமல் இதை மாத்திரம் மாற்றுவானேன்?

அன்றியும், ஆழ்வார் திருவாக்கில் 'மரணமானல்' என்கிறபாடமே வெளிவந்ததாக ஸகல பூர்வாசாரியர்களும் நன்குகாட்டி வியாக்கியானஞ் செய்துள்ளார்கள். * மாலை நண்ணி * என்கிற திருக்கண்ணபுரப்பதிகத்திலன்றோ *மரணமானலென்கிறவிந்தச் சந்தையுள்ளது. அப்பதிகத்திற்கு இந்தச் சொல்லே உயிரானதென்று கொண்டு வியாக்கியானம் செய்தருளியுள்ளார்கள். "சரீராவஸானத்திலே உம்முடைய விருப்பம் நிறைவேற்றக்கடவோம்" என்று ஆழ்வார்க்கு எம்பெருமான் ஸமாதானம் பண்ணினதாகவும், அதை ஆழ்வார் "மரணமானல் வைகுந்தங் கொடுக்கும்பிரான்" என்று தம்முடைய வனுஸந்தானத்தாலே வெளியிட்டதாகவும் பதிகத்திற்கு ப்ரவேசம் அருளிச் செய்துள்ளார்கள். பாசுரவியாக்கியானத்திலும் "இப்பாட்டில் மரணமானலென்றத்தைக் கொண்டிறே கீழ்ச்சொன்ன நிரூபணமெல்லாம்" என்று இருபத்தினாலாயிரத்திலும் முப்பத்தாறாயிரத்திலுமுள்ளது. மணவாளமாமுனிகளும் திருவாய்மொழி நூற்றந்தாதியில் இப்பதிகத்தின் ஸாரமாக இட்டருளின பாசுரத்தில் "மால் உமது வாஞ்

சைமுற்றும் மன்னுமுடம்பின்முடிவில், சால நண்ணிச் செய்வனெனத் தானுகந்து'' என்றருளிச் செய்துள்ளார். ஆசார்ய ஹ்ருதயத்திலும் (4—9.) "இனிப்பத்திலொன்று தசமதசையிலே பேறென்று.......நாளிடப் பெற்றவர்'' என்றுள்ளது. ஆழ்வார்க்கு எம்பெருமான் நாளிட்டுக் கொடுத்ததாகவும் அதை ஆழ்வார் தம் திருவாக்கால் அநுவதிப்பதாகவுமன்றோ வஸ்து ஸ்திதியில் ப்ரமேயமுள்ளது. ஆகவே 'மரணமாக்கி வைகுந்தங் கொடுக்கும்பிரான்'' என்று பாடமிருந்ததாக ப்ராமாணிகர்கள் நெஞ்சாற்கொள்ளவும் நியாயமில்லையென்று சுருக்கமாகத் தெரிவித்தோமாமோம்.

---

# பாடத்திருத்தப் பராமர்சம்

10—2—1949ல் வெளியிட்ட ஸ்ரீராமாநுஜன் 6.ல், "ஆச்சார்யஹ்ருதயத்தின் பெருமை'' என்ற மகுடமிட்டு நாம் வெளியிட்டிருந்த வியாஸத்தில் (7-ஆம் பக்கம் முதலாக) 37 பாடத் திருத்தங்கள் வெளியிட்டிருந்தோம். அதில் 11, 12 லக்கமுள்ள திருத்தங்களைப் பற்றிச் சில பெரியார்கள் ஸந்தேஹம் கேட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஸந்தேஹ பரிஹாரம் செய்கிறோமிங்கு.

ஆசார்யஹ்ருதயம் முதற் பிரகரணத்தில் சூர்ணை 60-ல், "அவர்களுக்குக் காயோடென்னுமவையே தாரகாதிகள்'' எனறு அச்சுப் பிரதிகளிற்காண்கிறபாடம் பிசகென்று 'காயோடென்னுமவையே' என்பதில் என்னுமிவையே என்று திருத்தவேணுமென்று தெரிவித்திருந்தோம். இது அவசியம் திருத்தவேண்டுமோ? என்னுமவையென்றாலும் என்னுமிவையென்றாலும் பொருள் ஒன்றுதானே; வாசியில்லையே. எதற்காகத் திருத்தவேண்டும்? என்கிறார்கள். "*வீழ்கனியுமூழிலையு மென்னுமிவையே நுகர்ந்து* என்கிற பெரியதிருமடற்சந்தை இங்கு விஷயவாக்யமாதலால்'' என்று நாம் திருத்தத்திலே ஸ்பஷ்டமாக எழுதியிருக்கிறோம். அது விளங்கவில்லையென்று தெரிகிறது. நன்கு விளக்குவோமிங்கு. ஆழ்வார்களின் சந்தைகளைக் கொண்டே ஆசார்ய ஹ்ருதய திவ்யக்ரந்தம் அமைக்கப்பட்டுள்ளதென்பது அனைவருமறிந்ததே. மூலமான பாசுரத்தின் பாடம் எப்படியுள்ளதோ அப்படியேதான் இங்கும் பாடம் அமைய வேண்டும்; அது மாறுபாட்டையக் காரணமில்லை. அந்தப் பெரிய திருமடலில் "என்னுமிவையே'' என்று பாடமுள்ளதேயன்றி 'என்னுமவையே' என்று ஒரு நாட்டிலும் ஒரு பதிப்பிலும் ஒருவர்வாக்கிலும் பாடம் கண்டதில்லை, கேட்டதில்லை. ஆகவே "காயோடென்னுமிவையே தாரகாதிகள்'' என்பதே சுத்தபாடம், வேறு வகையானபாடம் வழுவேயாகும்.

இனி இரண்டாவது ஸந்தேஹபரிஹாரம். "அழுநீர் துளும்பக் கடலும் மலையும் விசும்பும் துழாய் திருமாலென்றெங்கே காண்கேனென்னுமிவரலமாப்பு அவர்களுக்குப் புத்ரவியோகத்திலே'' என்கிற மேல் சூர்ணையில்—"திருமாலென்றும் எங்கே காண்கேனென்றும்'' என்கிறபாடம் மிகத் தவறு, அநந்விதம்—என்று எழுதியிருந்தோம். இதில் என்ன தவறு? ஏன் அந்வயிக்காது? என்பார்க்குத் தெளிவுபடத் தெரிவிக்கிறோமிங்கு. இந்த சூர்ணையில் திவ்யப் பிரபந்தச் சந்தைகள் எத்தனை கோக்கப்பட்டிருக்கின்றனவென்று உற்று நோக்கவேணும். *சேயரிக்கணழு நீர் துளும்ப வலமருகின்றன* என்கிற திருவிருத்தப் பாசுரமொன்று, *கடலும் மலையும் விசும்பும் துழாய் எம்போல்* *சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன்* எங்கே காண்கேன் ஈன்துழாயம்மான் தன்னை* என்கிற திருவாய்மொழிப் பாசுரங்கள் மூன்று—ஆக

நான்கு சந்தைகள் கோக்கப்பட்டிருக்கின்றன. (மேலேயு மொன்றுண்டு; அதுநிற்க.) இப்படி பல பாசுரங்கள் கோக்கப்பட்டிருக்கும்போது திருமாலென்றும் எங்கேகாண்கேனென்றும் என்றிரண்டிடங்களில் மாத்திரம் **இதிகரணம்** செய்வது யுக்தமாகுமோ வென்று பார்க்க வேணும்.

" அழுநீர் துளும்பவென்றும் கடலும் மலையும் விசும்புந் துழாயென்றும்"

என்று முன்னேயும் **இதிகரணம்** இருக்கவேண்டுமன்றோ. 'என்றும், என்றும்' என்று இதிகரணம் பண்ணுவதை அவ்விடங்களில் விட்டிட்டு மேலிரண்டிடங்களில் மாத்திரம் அது பண்ணுவது க்ராந்திக ஸரணியாகுமோ ? இது மிக அவசியமாகக் கவனிக்கவேண்டிய விஷயம். மேலும், இந்த திவ்யக்ரந்தத்தில் திவ்யப்ரபந்தச் சந்தைகளை அளவுகடந்து எடுத்தாலும் அவற்றை ஆசிரியர் ஸ்வவாக்யம் போலவே வரிசையாக வொழுங்குபடுத்தியமைத்து அருளிச்செய்திருக்கிறாரேயொழிய "என்கிறபடியே" என்றாவது "என்றும் என்றும்" என்றாவது சேர்த்துச் சொல்லுகிற வழக்கம் பெரும்பாலுமில்லை. "அனந்தக்லேச நிரதிசயானந்த ஹேது" -இத்யாதி (5) சூர்ணையில் "மறந்தேனறியகிலாதே உணர்விலே னேணிலேனயர்த்தேன்றும் உய்யும்வகை நின்றவொன்றை நன்கறிந்தனன் உணர்வினுள்ளே யாம்பரி சேன்றும் சொல்லுகிற" என்றிருப்பது யாமுமறிந்ததே. அங்கு அர்த்தபஞ்சக ஜ்ஞானமின்மைக்காக ஐந்து சந்தைகளையும் அஃதுண்மைக்காக ஐந்து சந்தைகளையும் மேற்கோளாகவே உதாஹரிக்க நேர்ந்தபடியால் "என்றும்-என்றும் சொல்லுகிற" என்று வாக்கியம் அமைக்கவேண்டியதாயிற்று. அத்தகைய ஸந்நிவேசம் இந்த திவ்யக்ரந்தத்தில் அதிஸ்வல்பம். மேற்கோளெடுப்பதாகக் காட்டாமல் ஸ்வவாக்யமாகவே அமைத்தெழுதுகிற சாதுர்யமன்றோ இவ்வாசிரியர்க்கு அஸாதாரணமானது. "அழுநீர்துளும்பக் கடலும் மலையும்" என்கிற ப்ரக்ருத சூர்ணையில் தவறான பாடமாக வழங்கி வருவதில் 'என்றும், என்றும்' என்றிருப்பதாக வைத்துக்கொண்டால் அந்வயிக்கவேமாட்டாதென்பதை க்ராந்திகஸரணியறிவார் எளிதினுணர்வர்கள். நாமும் கீழே விவரித்துக்காட்டியுள்ளோம். "திருமாலென்றெங்கேகாண்கே னென்னுமிவரலமாப்பு" என்பதே சுத்தபாடம். அதுவே பொருத்தமாக அந்வயிக்கக் கூடியதும். **திருமாலென்று** என்றவிடத்திலுள்ள **என்று** என்கிற சொல் ஆசார்யஹ்ருதயகாரருடையதன்று. "சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன்" என்றே பாசுரமாதலால் பாசுரத்திலேயே சேர்ந்துள்ளதாமது. **திருமால்** என்று மாத்திரம் சந்தையெடுத்தால் அது எவ்விடத்திலுள்ள பாசுரமென்று கண்டுபிடிக்க முடியாமற் போகுமென்று கருதியே 'திருமாலென்று' என்கிறவரையில் சந்தையெடுத்தார் ஆசிரியர். 'சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன்' என்கிற பாசுரமேயன்றோ இப்போது தோன்றித் தீரும். ஆகவே அவ்விடத்தில் உம்மையைச் சேர்ப்பது ஸங்கதமாகாது. இனி, "எங்கே காண்கேன்" என்றதற்குப்பின் 'என்றும்' என்பது சொல்வடிவமன்று. என்னும் என்பதே சொல்வடிவம். **என்னுமிவர்**—என்றருளிச்செய்யுமாழ்வார் என்றபடி. ஆகவே இந்த சூர்ணையில் (என்றும் என்றும்) என்கிற பாடம் ஸர்வாத்மநா அஸங்கதமென்று ப்ராமாணிகர்களான விவேகிகள் உணரவடுக்கும்.

"எங்கே காண்கேனென்றும் இவரலமாப்பு" என்றால் இது அந்வயிக்கவேமாட்டாதென்பது நன்கு குறிக்கொள்ளத்தக்கது. என்றும் என்பது அலமாப்பில் அந்வயிப்பதாகத் தானே சொல்லவேண்டும்: அது சொல்லவொண்ணாதென்பதை விரகர் அறிவர்.

(என்றும் என்றும்) என்று இதேவிதமான பிழை இவ்வோரிடத்தில் மாத்திரமன்று. இங்ஙனே பலவிடங்கள் நமக்கு நினைவுக்கு வருகின்றன. இவ்வாசார்யஹ்ருதயத்திலேயே

(சூர்ணை 35) "ஒரு தலையில் க்ராம குலாதிவ்யபதேசம் குலந்தரு மென்னும் மாசிற்குடிப்பழி யென்று" என்கிற ஸ்ரீஸூக்தியில் "குலந்தருமென்றும்.......பழியென்றும்" என்று அஸம்பத்த மாக அச்சிட்டிருப்பதும் சிலர் அப்படியே ஓதிவருவதும் வருந்தத்தக்கது. உபதேச ரத்தின மாலையில் "மற்றுள்ள வாழ்வார்களுக்கு" என்கிற பாசுரத்தில் "பெற்றிமையோரேன்று முத லாழ்வார்களென்னும் பெயரிவர்க்கு" என்பதை "பெற்றிமையோ ரேன்றும் முதலாழ்வார்க ளென்றும்" என்று ரஸாபாஸப்படுத்திச் சிலர் ஓதிவருவதும் இதுபோன்றதே. திவ்யப்ரபந்தங் களிலும் இப்படி அபரிமிதம். திருவிருத்தத்தில் (35) "உலகளந்த மால்பால்துழாய்க்கு மனமுடையார்க்கு நல்கிற்றை" என்றவிடத்து "துழாய்க்கும் மனமுடையார்க்கும்" என்றே பலர் ஓதிவருவர். திருவாய்மொழியில் (3-6-7) "எழுமைக்கு மெனதாவிக்கு இன்னமுதத்தினை" என்றவிடத்து "எழுமைக்கும் எனதாவிக்கும்" என்பர். அதிலேயே (9—1—8) "போழ்து போக வுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கும்" என்பர். இப்படிப்பட்ட ப்ரமங்கள் கற்றுணர்ந்த பெரியார்களுக்கும் வாஸநாபலத்தாலோ பாதிதாநுவ்ருத்தியாகவோ நேர்ந்துவிடுகின்றன. "என் கொலம்மான் திருவருள்கள்!" என்னவேண்டுமத்தனை.

---

## —: அபூர்வ வெளியீடுகள் :—

| | | |
|---|---|---|
| **ஸ்ரீவசந பூஷணமீமாம்ஸா பாஷ்யம் (தேவநாகரலிபி)** | .... | **2—8—0** |
| **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் (தேவநாகரலிபி** | .... | **2—0—0** |
| **திவ்யப்ரபந்த ஸாராம்ருதம் (முதற்பகுதி)** .... | .... | **0-12—0** |

*கிடைக்குமிடம்*—**க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.**

---

## — அன்பர்களுக்கு அறிவிப்பு. —

*மதுரை ஸத்ஸம்ப்ரதாய ஸபையின் சார்பாகப் பல அட்வொகேட்டுகளாலும் பண்டிதர் களாலும் வெளியிடப்பட்டுள்ள மதுரபாஷித மென்னும் புத்தகம் ஆஸ்திகர்கள் அவசியம்* வாசிக்கத்தக்கது. 2 அணு ஸ்டாம்பு அனுப்புகிறவர்களுக்கு ஷை புத்தகம் [42-பக்கமுள்ளது] *புக்போஸ்டு மூலம் அனுப்பப்படும்.*

*இங்ஙனம்:*

S. ஸுந்தரராஜய்யங்கார், வக்கீல்
11, கிருஷ்ணன்கோவில் வடக்குமாசி வீதி, மதுரை.

ஸ்ரீ:

# உலகத்தின் ருசி ஒவ்வொருவிதம்

"லோகோ பிந்நருசி:" என்பது உலகமறிந்தது. ஒன்றில் ஒருவர்க்குள்ள ருசி மற்ருெருவர்க்கிராது. அப்படியே பகவானுல் படைக்கப்படும் பொருள்களின் தன்மைகளும் ஒருவிதமாகவன்றிக்கே பலவகைப்பட்டிருக்கும். ஒன்று காரம், மற்ருென்று புளிப்பு, இன்னென்று தித்திப்பு, வேருென்று கைப்பு—இப்படியாக விருக்கும். ஒன்று நேராயிருக்கும், மற்ருென்று கோணலாயிருக்கும். சில வஸ்துக்களின் தன்மையை மாற்றமுடியும், வேறு சில வஸ்துக்களின் தன்மையை வருந்தியும் மாற்றமுடியாது. பாகல்காய் இயற்கையில் கைப்பானுலும் ஸம்ஸ்காரவகையில் அதை வெகுமதுரப்படுத்தியுண்பாரைக் காண்கிருேம். எட்டிக்காய் முதலானவற்றை இப்படி உபயோகங்கொள்ள முடிகிறதில்லை. பல்வேறு ருசிபேதமுள்ள பதார்த்தங்கள் பகவானுல் படைக்கப்பட்டு உலகில் மலிந்து கிடக்கின்றன. அவரவர்கள் தங்கள் தங்கள் ருசிக்குத்தக்கபடி பொருள்களைக் கைப்பற்றியனுபவிக்கிருர்கள். ஒருவருடைய அபேக்ஷைக்காக ஒரு பொருளின் தன்மை மாறிவிடுவதில்லை. சர்க்கரை வேண்டியவர் சர்க்கரையை வாங்கி உபயோகித்துக்கொள்வதும் மிளகு வேண்டியவர் அதனைவாங்கி உபயோகித்துக்கொள்வதும் எங்குமுள்ள இயல்பு. கற்கண்டுவேண்டியவர் படிகாரத்தை வாங்கி வாயிலிட்டு 'இது தித்திக்க வில்லையே, இது தித்திக்கும் படியாகச் செய்ய முடியாதா?' என்று நினைப்பதில்லை. அவரவர்கள் தம்தம் ருசிக்குத் தக்கபடி அந்தந்த வஸ்துக்களைப் பெற்று உபயோகங்கொள்வது என்பதே எங்குமுள்ளது.

ஆங்காங்கு ததீயாராதனை [சாப்பாடு] நடத்துகிறவர்கள் பலவகைப் பண்டங்களை ஆக்கிவைக்கிருர்கள். புளிப்புவகையில் நான்கு; தித்திப்புவகையில் இரண்டு; காரவகையில் ஒன்று—என்றிப்படி சமைத்து வைக்கிருர்கள். இவை யெல்லாவற்றையும் ஒருவரே விரும்பியுண்பது முண்டு. சிலர் சிலவற்றைத் தள்ளிச் சிலவற்றை மாத்திர முண்பது முண்டு. சிலர் தமக்கு வேண்டிய வஸ்து ஒன்றுமே யில்லை யென்று வெறுப்புடன் எழுந்து போவது முண்டு. மிக்க பசியுள்ளவர்களுக்கு எந்தப் பண்டமும் ருசிகரமாக வாயினுட் செல்லுகிற தென்பதும் அநுபவஸித்தம். லட்டும் ஜிலேபியும் பேடாவும் பதிர்ப்பேணியுமாகச் சமைக்கு மிடத்தில் புளித்துகையலும் பண்ணி வைப்பதுண்டு. அது பண்ணி வைக்கவில்லை யென்ருல் அதற்காகக் குறை கூறுவாருமுண்டு, அதை நெஞ்சில் இட்டெண்ணுமலே போவாருமுண்டு. ஒரு ததீயாராதனையைப்பண்ணி ஒவ்வொருவரையும் ஒருமுகமாக மகிழ்விப்பதென்பது முடியாத காரியம். பசியில்லாதவர்களுக்கு தேவான்னமும் தூஷணைக்கிடமாகுமன்ருே.

ஒருபத்திரிகையை நடத்தி உலகத்திலுள்ளாரெல்லாரையும் ஒருங்கே உகப்பிப்பது முடியாததொன்றல்லவா? ஸ்ரீபாஷ்ய மொழிபெயர்ப்பு வெளிவந்தால் நல்லதென்பர் சிலர். பகவத்விஷய ரஸப்பெருக்குகள் வெளிவந்தால் நன்றென்பர் சிலர். ரஹஸ்யார்த்த ரத்னங்கள் வெளிவந்தால் பேரின்பமென்பர் சிலர். ஸ்ரீராமாயண விசேஷார்த்தங்கள் வெளிவந்தால் அனைவர்க்கும் ருசிகரமாயிருக்குமென்பர் சிலர். கூரத்தாழ்வான் பட்டர் முதலான மஹா

சார்யர்களின் ஸ்ரீஸூக்திகட்கு விளக்கமான தெளிவுரை வெளிவந்தால் பலருடைய மனக்குறை தீருமென்பர் சிலர். இங்ஙனே ஒவ்வொருவர் ஒவ்வொன்றிலே சுவைகண்டு காதலித்திருப்பர்கள். தாங்கள் எதிர்பார்க்கிற விஷயம்தவிர வேறுவிஷயங்கள் வரக்கண்டால் வெறுப்பாரும் சிலர். "இந்த விஷயம் நமக்கு விரும்பத்தக்கதாக இல்லாமற் போனாலும் வேறு சிலர்க்கு இது விருப்பமாயிருக்குமே" என்று நினைப்பார் மிகச் சிலரேயாவர்.

நமது ஸ்ரீராமாநுஜன் அனைவரையும் ஆனந்திக்கச் செய்ய வேணுமென்பதே நமது விருப்பம். அதற்குத் தகுந்தபடியே நம்மாலானமட்டும் முயன்று வருகிறோம். அவரவர்களது விருப்பங்களை யநுஸரித்தே பல் விஷயங்களையும் இதில் பொறித்து வருகிறோம். சில விஷயங்கள் சிலர்க்கு விருப்பமாக இல்லை யெனினும் அவர்கள் மற்றையோருடைய ருசியைத் தங்கள் நெஞ்சில் ஆவாஹனஞ் செய்து கொள்வது தகுதி.

இதில் தொடர்ச்சியாகச் சில விஷயங்கள் வெளியிடப்பட்டு வருவதுண்டு. அவை இடையில் நின்று போகாமல் பூர்த்தியாகவே வெளிவரும். சில ஸமயங்களில் அவகாசக் குறைவினால் அவை வெளிவரத் தடைபட்டால் அவை அடியோடு நின்றுபோய் விட்டதாக நினைக்கலாகாது. அடுத்த இதழ்களில் வெளிவருமென்று திண்ணமாக எண்ணுக. உபய ராமாயண ஸாரம், ஸ்ரீ பாஷ்ய ஸாரார்த்த ஸங்க்ரஹம், ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலை........ இவை இடையறாது வெளிவந்து முடிவு பெறும். சில இதழ்களில் அவகாசக் குறைவினால் தடைப்பட்டால் அவற்றின் பிரசுரம் அடியோடு நின்றுவிட்டதாக நினைக்க வேண்டாவென்று தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இவ்விதழில் வெளிவருகின்ற திவ்யார்த்த தீபிகைச் சிறப்பு என்னும் வியாஸம் பல மஹான்களின் கோரிக்கையையும் நியமனத்தையும் ஆதரித்து மிக அவசியமென்று கருதியே வெளியிடப்படுகிறது. அது ஸம்பந்தமான வியாஸங்களை ஆஸ்திகர்களனைவரும் ஆழ்ந்த ஆராய்ச்சியுடன் கண்டு களிக்கக் கோருகிறோம்.

---

## ஓர் விசேஷ அறிவிப்பு.

நமது ஸ்ரீராமாநுஜன் ஆசிரியரான P. B. A. ஸ்வாமிகள் வழக்கம்போல் மார்கழி மாதத்தில் மதராஸிலேயே தங்கியிருக்க வேண்டி யிருப்பதால் **14—12—49** தேதி முதல் **14—1—50** தேதிவரையில் ஸ்வாமியின் விலாஸம் கீழ்க்கண்டபடி ;

**ஸ்ரீ P. B. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி,**
**48, கோவிந்தப்ப நாய்க்கன் வீதி, G. T., MADRAS - 1.**

ஷை இடமாகிய உப்பட்டூர் ஆழ்வார் செட்டி சாரிடி ஹாலில் தினந்தோறும் காலைவேளைகளில் ஆசார்யஹ்ருதய உபந்யாஸம் நடைபெறும். தங்கசாலைத் தெரு, தொண்டமண்டலம் ஸ்கூல் ஹாலில் மாலை வேளைகளில் திருப்பாவையுபந்யாஸம் நடைபெறும்.

இப்படிக்கு,
C. ராதாகிருஷ்ணய்யா,
ஸபா மானேஜர்.

# அருமருந்தானதோர் வியாஸம்.

Doctor. Sir. K. S. Krishnan, F. R. S. (New Delhi.)

சில நாள்களுக்கு முன் "நம்பிள்ளை பட்டரை நேரில் ஸேவித்திருக்க முடியுமா?" என்ற விசாரம் நிகழ்ந்ததாகவும், ஈடு முப்பத்தாறுயிரப்படியைப் பலகால் ப்ரவசனம் பண்ணின சில பெரியார்களும் "பட்டரை நம்பிள்ளை ஸேவித்திருக்க ப்ரஸக்தியே கிடையாது" என்று சொன்னதாகவும், அப்போது ஒரு மகான் "வருளுமிறையோன்" திருவாய்மொழியில் எட்டாம் பாட்டின் (4–8–8) ஈட்டில் "இது பட்டரருளிச் செய்ய நான் கேட்டேனென்று பிள்ளை யருளிச்செய்வர்" என்றுள்ள ஸ்ரீ ஸூக்தியை எடுத்துக் காட்டியதாகவும் ஸ்ரீராமானுஜனில் எட்டாவது இதழில் வந்துள்ளது. இதைப்படித்தபோது அடியேனுக்கு ஞாபகத்துக்கு வந்த இதே மாதிரியான வேறு இரண்டு ஸ்ரீ ஸூக்திகளை ஸ்ரீராமானுஜன் பன்னிரண்டாவது இதழில் விஜ்ஞாபித்திருந்தேன். பெரிய திருமொழி "வெருவாதாள்" (5,5,1) வ்யாக்யானத்தில்

> "திருப்பாணாழ்வார் 'அன்று நேர்ந்த நிசாசரரை' என்று – ராவணவதமே தொடங்கிப் பெருமாளை அடியொத்தினர். அது தெற்குத் திருவாசலாலே புகுந்து கிடந்தது. 'மந்திபாய்' என்று – பரமபதமே தொடங்கி அடியொத்தினர். திருமலையிலே புகுந்து கிடந்தது. அங்கே பார்த்தவாறே நின்றபடியைக் கண்டார். இன்னமும் போக்கிலே ஒருப்பாடுதோற்றி யிருந்தது என்று அவ்விடமே தொடங்கி அடியொத்தினவாறே வடக்குத்திருவாசலாலே புகுந்து படுக்கை இங்கேயாயிருந்தது" என்று பட்டர் அமலனுதிபிரானருளிச்செய்யாநிற்க நான்கேட்டேன் என்று பிள்ளை அருளிச்செய்தார்"

என்றுள்ள பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீ ஸூக்தி ஒன்று.

மற்றொன்று, அருள்பெறுவாரின் ஈட்டில் (10, 6, 1)

"இது பட்டர்தாமே அருளிச்செய்ய நான் கேட்டேன் என்று அருளிச்செய்தார்" என்றுள்ள ஸ்ரீஸூக்தி.

இன்னொரு ப்ரமாணமும் ஸமீபத்தில் அடியேனுக்குத் தெரியவந்தது. இது மேற்சொன்ன மூன்று ப்ரமாணங்களைக் காட்டிலும் விசேஷித்திருப்பதால் அதை இங்கு விஜ்ஞாபிக்கிறேன். இதுதான் பெரியதிருமொழி 4, 10, 8 ன் வியாக்யானத்தில் காணப்படும் நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி. இதன் விசேஷம் என்னெனில் பட்டரருளிச்செய்ய நம்பிள்ளை கேட்டிருந்ததுடன், தம்மைப்பார்த்து பட்டரருளிச் செய்தாராகவும் இந்த ஸ்ரீ ஸூக்தியில் காணப்படுகிறது.

மூ.—முடியுடையமரர்க்கிடர் செய்யுமசுரர்தம் பெருமானை யன்றரியாய்
மடியிடை வைத்து மார்வை முன்கீண்ட மாயனார் மன்னியகோயில்

வ்யா.—(முடியித்யாதி) "ஈச்வரோஹம்" என்று அபிமானித்திருக்கிற தேவஜாதிக்கு க்லேசத்தை விளைக்கிற அஸுரேந்த்ரனுண்டு—ஹிரண்யன், அவனை (அன்று) சிறுக்கனுக்கு அவன் நலிவைப் பண்ணினவன்று, நரஸிம்ஹமாய் (மடியிடைவைத்து)

பிராட்டிபோல்வாரை ஏறிட்டுக் கோள்ளக்கடவமடியிலே, துஷ்ப்ரக்ருதியான ஹிரண்யனை ஏறிட்டு. "தன்னுடைய தாள்மேல் கிடாத்தி" என்கிற விடத்துக்கு பட்டரருளிச் செய்ய நான் கேட்டேன்" என்று பிள்ளையருளிச் செய்வர்; "ப்ரதிகூலனான ஹிரண்யனைவிட்டு ஆசையுடைய வென்னையன்றோ அம்மடியிலே ஏறிட்டுக் கோள்ளவடுப்பது" என்று தம்மைப் பார்த்தருளிச் செய்தாராக.

அப்பு அரும்பதவுரையில் "தம்மைப்பார்த்து" என்பதற்கு "ஆழ்வார்தாமே தம்மைப்பார்த்து அருளிச்செய்தாரென்கை" என்று இருந்தாலும், "தம்மைப்பார்த்து பட்டரருளிச்செய்தாராகப் பிள்ளையருளிச்செய்வர்" என்பதுதான் வ்யாக்யான பங்க்திக்குச்சேரும் என்று தோன்றுகிறது.

"தன்னுடைய தாள்மேல் கிடாத்தி" என்ற பாசுரம் பெரிய திருமடலிலுள்ளது (102) மூ.— .... ... ... .... ... .... வல்லாளன்

மன்னுமணிக்குஞ்சிபற்றி வரவீர்த்துத் தன்னுடைய தாள்மேல் கிடாத்தி—

இவ்விடத்து வ்யாக்யானம்: "முடியைப்பற்றினபோதே ப்ராணன் போயிற்று. பின்னை பிணத்தையிழுக்குமோபாதி தன்னுடைய பிராட்டி சாயக்கடவ மடியிலே, என்னைப் போலன்றிக்கே, முருட்டுப்பையலையோ மடியிலேற்றுவது என்கிறாள். " என்று பட்டர் நம்பிள்ளை விஷயமான இன்னொரு ஸ்ரீ ஸூக்தியையும் இங்கு விஜ்ஞாபிக்க விரும்புகிறேன். இதுவும் பெரிய திருமொழி வ்யாக்யானத்திலுள்ளது. "வள்ளி கொழுநன்" பாட்டில் (6, 7, 6)

* பள்ளி கமலத்திடைப்பட்ட பகுவாயலவன் முகம் நோக்கி நள்ளி யூடும் வயல்...... என்ற இடத்து வ்யாக்யானத்தில்

"(பள்ளி கமலமித்யாதி) பட்டரருளிச் செய்யக் குறிப்பாகக் கேட்டிருப்பதோரு பாட்டு என்றருளிச் செய்வர். பகுவாயலவன் கமலத்திடைப் பள்ளி பட்டது. நள்ளியானது கர்ப்பதாரணத்தாலே கேதித்திருக்க அதுக்கு இனியது இடவேணும் என்று மதுவுக்காகப் போந்த அலவனானது தாமரைப்பூவிலே வந்திழியக்கொள்ள, போது அஸ்தமிக்கையாலே, உடம்பைக் கொண்டு அங்கே யிங்கே புரண்டு ராத்ரி அதிலே தங்கி, அதில் தாதும் சுண்ணமும் உடம்பிலே நிழலிட்டுத் தோற்ற, போது விடிந்தவாறே வந்தது. இது போன போதே தொடங்கி, கதவைத்திறந்து வரவுபார்த்துக்கொடு நின்ற நள்ளியானது, இத்தைக்கண்டு, ராத்ரி தங்கினபடியாலும், உடம்பில் சுவடிருந்தபடியாலும், இது வெறுமனல்ல என்று முகம்மாறிக் கதவையடைத்து உள்ளே போய்ப்புக்கது. இத்தை பட்டரருளிச் செய்தவநந்தரம், பிள்ளை திருநறையூரரையர் 'ஆராய்ந்து குற்றம் நிரம்பினால் பின்னையன்றோ தண்டிப்பது' என்ன, என் செய்வோம்! கேள்வியில்லாதபடி பெண்ணரசு நாடாய்த்தே!' என்றருளிச் செய்தார்."

என்றுள்ளது. இங்கே "பட்டரருளிச் செய்யக் குறிப்பாகக் கேட்டிருப்பதொரு பாட்டு' என்றருளிச் செய்வர்" 'பட்டரருளிச்செய்ய(த் தாம்) குறிப்பாகக் கேட்டிருப்பதொரு பாட்டு' என்று (பிள்ளை) யருளிச் செய்வர் என்பது தான் சேரும்.

தாஸன், கிருஷ்ணன்.

---

# திவ்யப்ரபந்தத் திருமகளணிமாலை.

S. ரங்கஸாமி ஐயங்கார், M.A., (புரு.)

1. அந்தாமரைப்பேதை *
2. அம்புருவ வரிநெடுங்கண் அலர்மகள்
3. அமரர்பதியுடைத்தேவி
4. அரவிந்தப்பாவை
5. அலர்மகள்
6. அலர்வாய் மழைக்கண்மடந்தை
7. அல்லிமலர்த்திருமங்கை
8. அல்லிமலர்மகள்
9. அல்லிமாது
10. அல்லிமாமலர்மங்கை
11. அல்லியம்பூமலர்க்கோதை
12. அணிமாமலர்மங்கை
13. இன்துணைப்பதுமத்து அலர்மகள்
14. எழில்மலர்மாது
15. ஒண்தாமரையாள்
16. ஒண்டொடியாள்
17. ஒருமதிமுகத்துமங்கை
18. கடிமாமலர்ப்பாவை
19. கறைதங்குவேல்தடங்கண்திரு
20. குலமாமகள்
21. கூந்தல்மலர்மங்கை
22. கொங்கார் இலைப்புண்டரீகத்தவள்.
23. கொந்தார் காயாவின்கொழுமலர்த்திரு
24. கொம்பராவு நுண்ணேரிடை
25. கோதை நறுமலர்மங்கை
26. கோலமலர்ப்பாவை
27. கோலத்திருமாமகள்
28. சந்தணிமென்முலைமலராள்
29. சிரீவரமங்கை
30. சீதை
31. சுரும்புறுகோதை
32. செங்கமலத்திருமகள்
33. செய்யநெடுமலராள்
34. செய்யபோதில்மாது
35. செய்யவள்
36. தாமரைமலர்மேல்மங்கை
37. தாமரைமேல் மின்னிடையாள்
38. தாமரையாள்
39. திரு
40. திருமகள்
41. திருமங்கை
42. திருமாமகள்
43. திருமாது
44. திருமார்வத்துமாலைநங்கை
45. திருவுடையாள்
46. தூமலராள்
47. தூவியம்பேடையன்னாள்
48. தெய்வத்திருமாமலர்மங்கை
49. தேனார்மலர்மேல்திருமங்கை
50. தேனுலாவுமென்மலர்மங்கை
51. தேரணிந்த அயோத்தியர்கோன் பெருந்தேவி
52. தோடுலாமலர் மங்கை.
53. நல்விரை மலர் கோதிய மதுகரம் குலவிய மலர்மகள்
54. நாண் மலராள்
55. நித்திலத் தொத்து.
56. நெடுங்கடலமுதனையாள்.
57. நெறிந்த கருங்குழல் மடவாள்
58. நேரிழை மாது.
59. பங்கயத்தாள்.
60. பங்கயமாமலர்ப்பாவை
61. பண்ணை வென்ற இன்சொல் மங்கை.
62. பதுமத்து அலர்மகள்.
63. பனிமலராள்.
64. பனி மலர்மேல் பாவை.
65. பாவை.
66. பால் மொழியாள்.
67. பிறையுடைய வாணுதற்பின்னை.
68. புண்டரீகத்தவள்.
69. புண்டரீக பாவை.
70. புலம் மனுமலர் மிசை மலர்மகள்.
71. பூங்கோதையாள்.
72. பூமகள்.
73. பூமங்கை.
74. பூம்பாவை.
75. பூமேய செம்மாது.
76. பூமேல் மாது
77. பூவளருந்திருமகள்

---

* ஒவ்வொரு திருநாமத்தோடும்—"**வாழி**" அல்லது "**போற்றி**" என்று சேர்த்துப் பாராயணம் செய்தல் நன்று.

78. பூவார் திருமாமகள்
79. பூவின் மிசை நங்கை
80. பூவின் மேல் மாது
81. பூவினை மேவிய தேவி
82. பெரும்பணைத்தோள்மொய்ம்மலராள்
83. பேதை மங்கை
84. பொற்றாமரையாள்
85. பொலிந்திருண்டகார்வானில் மின்னே போல்தோன்றி மலிந்ததிரு
86. போதார் தாமரையாள்
87. போதில்மங்கை
88. பௌவத்தாரமுதனையபாவை
89. மங்கை
90. மடப்பாவை
91. மடமகள்
92. மடவரல்
93. மதுகரம்குலவியமலர்மகள்
94. மதுமலராள்
95. மலர்க்கிழத்தி
96. மலர்க்குழலாள்
97. மலர்மகள்
98. மலர்மங்கை
99. மலர்மாது
100. மலர்மேல்மங்கை
101. மலர்மேல்மலிமடமங்கை
102. மலர்மேலுறைவாள்
103. மலர்வைகுகொடி
104. மலராள்
105. மன்னுமலர்மங்கை
106. மாது
107. மாமலர்மங்கை
108. மாழைமென்னோக்கி
109. மானமருமென்னோக்கி
110. மானேய்நோக்கின்மடவாள்
111. மின்னனைத்தநுண்மருங்குன் மெல்லியல்
112. மின்னனைத்த நுண்ணிடையாள்
113. மிதிலைச்செல்வி
114. மைதிலி
115. மைத்தகுமாமலர்க்குழலாள்
116. மையகண்ணாள்
117. மையார்கருங்கண்ணி
118. வலமார்பினில்வாழ்கின்ற மங்கை
119. வடிவிணையில்லாமலர்மகள்
120. வடித்தடங்கண்மலரவள்
121. வண்டார்பூமாமலர்மங்கை
122. வரையாகத்துள்ளிருப்பாள்
123. வல்லிநாண்மலர்க்கிழத்தி
124. வாசஞ்செய்பூங்குழலாள்
125. வாள்நெடுங்கண்ணி
126. வாரணிந்தமுலைமடவாள்
127. வில்லேர்நுதல்வேல்நெடுங்கண்ணி
128. வில்லைத்தொலைத்த புருவத்தாள்
129. வெறியார்ந்தமலர்மகள்
130. வேங்கடம்சேர்தூவியம்பேடையன்னாள்
131. வேரிமாறுதபூமேலிருப்பாள்
132. வைதேவி.

**பலன்**

[திருமங்கை நின்றருளும்.
பூமன்னுமாது பொருந்தும்;
பூவளரும் திருமகளாலருள்பெற்றுப்
பொன்னுலகில் பொலிவர்தாமே.
வேரிமாறுதபூமேலிருப்பாள் வினைதீர்க்குமே.
சேமத்துணையாம் செப்புமவர்க்குத்திருமாதே.]

---



## ஸ்ரீ காஞ்சி. ப்ர. அண்ணங்காராசார்ய ஸ்வாமி



| | | | |
|---|---|---|---|
| கோயில் | திருமலை. | காழியூர். | ஸ்ரீபெரும்பூதூர் |
| பிரதிவாதிபயங்கரம் | அனந்தாண்பிள்ளை | தி. த சேஷாத்ரியாசாரியர். | கிடாம்பி ரங்கஸ்வாமி |
| கண்ணமாசாரியர் | கு. ஸ்ரீசைல கிருஷ்ணமாசாரியர் | | |

ஸ்ரீ

# ஆழ்வாராசாரியர்கள் திருவடிகளே சரணம்.

---

தமிழ் வேதமென்று போற்றப்படும் திவ்யப்பிரபந்தங்களிற் பாடங்களைத் திருத்தியும் திவ்யப்ரபந்தவ்யாக்யானப் பேராசிரியர்களைத் தமிழ் அறியாதாரென்று நிந்தித்தும் சிலர் எழுதி வெளியிட்ட சுவடியை ஆராயத் தோன்றிய நூலிது.

---

## 1. நான் கண்ட நல்லது.

## 2. திவ்யார்த்த தீபிகைச் சிறப்பு.

(ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு.)
கிடைக்குமிடம்; க்ரந்தமாலா ஆபீஸ்
சின்ன காஞ்சீபுரம்.

விலை ஒரு ரூபா.

1949.

# முக்கியமான அறிவிப்பு

இப்போது நாம் ஆராய்ச்சி செய்ய எடுத்துக்கொண்ட நூலில் இரண்டு குற்றங்கள் மிகப்பெரியன; அவையாவன — திவ்யப்பிரபந்தங்களுக்கு வியாக்கியானங்கள் செய்தருளின பூருவாசாரியர்களைத் தமிழறியாதாரென்று பல விடங்களில் பலவாறு நிந்தித் திருப்பதொன்று. திவ்யப்ரபந்தப் பாசுரங்களிலுள்ள பாடங்களை மனம் போனபடி திருத்தி 'இப்படித்தானிருக்கவேண்டும், இப்படி யிருந்தால்தான் எதுகை மோனை நயம் சிறக்கும்' என்றெழுதி யிருப்பது மற்றொன்று. இவ்விரண்டு செயல்களும் சிறிதும் அடாதவை என்பதை நாம் விரிவான நிருபணங்களினால் தெரிவிப்பது தவிர, கீர்த்திமூர்த்தியான மஹாமஹோபாத்யாய. சாமிநாதையரவர்களின் கட்டுரைகளினாலும் உலக முகக்கத் தெரிவிக்கவேண்டி அவருடைய புத்தகத்திலிருந்து அருமையான இரண்டு கட்டுரைகளை யெடுத்து இங்குப் பதிப்பித்திருக்கின்றோம்.

சாமிநாதையரவர்களும் கொண்டாட நின்ற பாண்டித்தியம் பெற்ற தியாகராச செட்டியாரைத் தமிழுலகம் நன்கறியும். அவருடைய இரண்டு சரிதைகளை யெடுத்து உலகமெல்லாமறியக் காட்டியுள்ள சாமிநாதையரவர்களுக்கு திவ்யப்ரபந்த வியாக்கியானப் பேராசிரியர்களிடத்து இருந்த மதிப்பு அளவிட வொண்ணுததாயிருக்கின்றது. நம்பிள்ளை முதலான அவ்வாசாரியர்களின் படிப்பின் அளவு சிறிதேனும் உலகுக்குத் தெரியாதென்பதும், அவர்கள் வடமொழி தென்மொழிகளிரண்டிலும் சிறந்த புலமையுடையவர்களென்பதும், அவர்களுடைய வியாகியானங்களினாலேயே திவ்யப்ரபந்தங்களுக்குப் பெருமை ஏற்பட்டதென்பதும் முதற் கட்டுரையினால் விளங்கும். இதனால், அப்பேராசிரியர்களின் தமிழறிவில் குறைகூறி நிந்தித்தும், அவர்களது வியாக்கியானங்களினால் திவ்யப்ரபந்தங்களின் தமிழ்ப் பெருமை போய்விட்டதென்று தூஷித்து மெழுதுகின்றவர்கள் வீண்பொறாமையாளர்களே யென்பது தேறிநின்றது.

வேதங்களோடொத்த நூல்களில் பொருளின்பம் பிரதானமே யொழிய எதுகை மோனை முதலியவற்றின் நயம் அவசியமன்றென்றும் எதுகை மோனை நயத்தை விரும்பி ஆன்றோரது பாடங்களைத் திருத்துமவர்கள் போப்பையரிலக்கணம் படித்தவர்களேயாவர் என்றும் அன்னவர்களது முகத்தில் விழிப்பதுங்கூடப் பாவம் என்றும் இரண்டாவது கட்டுரையினால் காட்டிநின்றபடியால் பிரகிருதத்தில் பூருவாசாரியர்களைவிடத் தம்மை மகாமேதாவிகளாக நினைத்து அவர்கள் உரையிட்டருளின பாடங்களிற் குறைகூறித் திருத்துமவர்கள் போப்பையரிலக்கணத்திற்குமேல் படியாதவர்களென்பதும் அவர்களது சுவடியைப் பார்ப்பதுங் கூடப் பாவம் என்பதும் தேறிநின்றது. நூலினுள்ளே விரிவு காண்க.

---

ஸ்ரீமத்மகாமகோபாத்யாய. தாக்ஷிணாத்ய கலா நிதி. டாக்டர். உ, வே. சாமி நாதையரவர்கள் 1939- ஆம்வருடத்தில் எழுதி அச்சிட்டு வெளியிட்ட நல்லுரைக் கோவை நாலாம் பாகத்தில், வித்துவான் தியாகராச செட்டியார் அவர்களின் சரிதை யெழுதிவருகையில் அதில் 159- ஆம் பக்கத்தில் ஆரம்பமாகி 163- ஆம் பக்கத்தில் முடிகின்ற ஓர் பகுதி எடுத்து வெளியிடப்படுகின்றது.

"பிறருடைய குறையைக் கண்டவிடத்துக் கண்டிக்கும் இயல்புடைய தியாகராச செட்டியார் தம்முடைய நிலையை நன்றாக உணர்ந்திருந்தார். தம்முடைய அளவுக்கு மிஞ்சிய காரியத்தைப் பிறர் வற்புறுத்தினாலும் செய்யார்; இது சிலரிடத்தில்

